يا باغي الخير اقبل
Come On For Charity

# இஸ்லாமும் இறை விசுவாசமும்

# توحيد الله

The Cooperative Office For Call & Guidance to Communities at Rawdhah Area
Under the Supervision of Ministry of Islamic Affairs and Endowment and
Call and Guidance - Riyadh - Rawdhah
Tel. 4918051 Fax 4970561 - P.O. Box 87299 Riyadh 11642

التاميلية
٢١

# அல்லாஹ் அவனது தூதர்பற்றி...

முஹம்மது (ஸல்) அவர்கள் (இறைவனின்) தூதரே அன்றி (வேறு) அல்லர்; அவருக்கு முன்னரும் (அல்லாஹ்வின்) தூதர்கள் பலர் (காலம்) சென்றுவிட்டார்கள். அவர் இறந்துவிட்டால் அல்லது கொல்லப் பட்டால், நீங்கள் உங்கள் குதிகாலின்மேல் (புறங்காட்டித்) திரும்பிவிடு வீர்களா? அப்படி எவரேனும் தம் குதிகால்கள்மேல் (புறங்காட்டித்) திரும்பிவிடுவாரானால் அவர் அல்லாஹ்வுக்கு எவ்வித தீங்கும் செய்துவிட முடியாது; அன்றியும், அல்லாஹ் நன்றியுடையோருக்கு அதிசீக்கிரத்தில் நற்கூலியை வழங்குவான். — ஆல இம்ரான். 3-144.

★ ★ ★

## மரணத்தின் பின்னால்

*இப்னு அப்பாஸ் (றழி) அவர்கள் தெரிவிக்கின்றார்கள். றசூல் (ஸல்) அவர்கள் எங்கள் மத்தியில் ஒரு உபதேசம் புரிந்து கூறினார் கள்:- மனிதர்களே! மறுமை நாளில் நீங்கள் அல்லாஹவிடத்தில் பாதணியில்லாதவர்களாகவும், ஆடையற்றவர்களாகவும், "கத்னா" செய்யாதவர்களாகவும் ஒன்று திரட்டப்படுவீர்கள். 'நாம் முதலாவது படைப்பினை சிருஷ்டிக்கத் தொடங்கியதுபோல் அதனை (மரணத் தின் பின்) மீள உருவாக்குவோம். இது எம்மீது வாக்குறுதியாகும். நிச்சயமாக நாம் இதனைச் செய்வோம்.'' அல் அன்பியா 21-103 அறிந்துகொள்ளுங்கள். படைப்புக்களுள் இறுதிநாளில் முதலாவதாக ஆடை அணிவிக்கப்படுபவர் இப்றுஹீம் (அலை) அவர்கள் ஆவார்கள். (அந்நாளில்) எனது உம்மத்தினரில் சிலரைக் கொண்டுவரப்பட்டு, அவர்களை நரகத்தின் பக்கம் எடுத்துச்செல்லப்படும். அப்போது நான் எனது இறைவனே; அவர்கள் எனது உம்மத்தவர்கள் (ஆயிற்றே) என்பேன். அதற்கு, நீர் (மரணித்ததன்) பின்னர், அவர்கள் எதனைச் செய்தார்கள் என உமக்குத் தெரியாது என எனக்குக் கூறப்படும். அவ்வேளையில் நல்லடியாரான ஈஸா (அலை) அவர்கள் கூறியது போன்று நானும் கூறுவேன்.'' மேலும், நான் அவர்களுடன் (உலகில்) இருந்த காலமெல்லாம் அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தேன். அப்பால் நீ என்னைக் கைப்பற்றியபின்னர் நீயே அவர்கள்மீது கண் காணிப்பவனாக இருந்தாய். நீயே எல்லாப் பொருட்கள்மீதும் சாட்சி யாக இருக்கிறாய். (இறைவா) நீ அவர்களை வேதனை செய்தால் (கண்டிப்பதற்கு முற்றிலும் உரிமையுள்ள) உன்னுடைய அடியார்க ளாகவே அவர்கள் இருக்கின்றனர்; அன்றி, நீ அவர்களை மன்னித்து விடுவாயானால் நிச்சயமாக நீதான் (யாவரையும்) மிகைத்தோனாக வும், ஞானமிக்கோனாகவும் இருக்கின்றாய். அல் மாயிதா 5-117, 118.*

*அப்போது நீர் அவர்களைப் பிரிந்தது தொடக்கம் அவர்கள் நிச்சயமாக (மார்க்கத்தை விட்டு) விலகிப் புறமுதுகு காட்டிச் செல்பவர்களாகவே இருந்தனர் என்று எனக்குக் கூறப்படும்.*

ஆதாரம்: புஹாரி, முஸ்லிம்.

# முன்னுரை

உலகமும் அதனைச் சூழவுள்ள பிரபஞ்சமும் அவற்றில் காணப்படும் அனைத்துப் படைப்புக்களும் அவற்றைப் படைத்தோனான அல்லாஹ்வால் விதிக்கப்பட்ட நியதிப்படி அணுவளவும் பிசகாது இயங்கிக்கொண்டிருக்கின்றன. இவையனைத்தையும் நிருவகிப்பதற்காகப் படைக்கப்பட்ட, அல்லாஹ்வின் பிரதிநிதியான மனிதனை அல்லாஹ் தன்னை வணங்கவேண்டும் என்பதற்காகவே படைத்தான். இம்மனிதனது வணக்கங்கள் நிறைவேறுவதற்குச் சரியான ஈமான் (நம்பிக்கை) அவசியமாகும். ஈமான் இல்லாத நிலையில் மனிதன் எக்கிரியைகளைப் புரிந்தாலும் அவை அல்லாஹ்வால் அங்கீகரிக்கப்பட மாட்டாது. ஒருவனது ஈமானின் அடிப்படைகளுள் தலையாயது தௌஹீது (இறை நம்பிக்கை) ஆகும். தௌஹீதை விளங்குவதில் ஏற்பட்ட தவறுகள் காரணமாக மக்கள் இன்று பல்வேறு வழிகேடான கொள்கைகளைப் பின்பற்றிவருகின்றனர். இதனால் தாம் அறியாமலே மக்கள் தமது உலக வாழ்வையும், மறுமை வாழ்வையும் பாழாக்கிக் கொள்கின்றனர்.

தௌஹீத் பற்றிய தவறான கருத்துக்கள் எம்மத்தியில் பலவாறாக, நன்கு திட்டமிடப்பட்டு பரப்பப்பட்டு வருகின்றன. உண்மையான தௌஹீதின் யதார்த்தம் என்ன என்பதை சங்கைக்குரிய உலமாக்கள் அவ்வப்போது தெளிவுபடுத்தி வந்துள்ளமை யாவரும் அறிந்த உண்மை. ஆனால் அண்மைக்காலங்களில் தௌஹீத் பற்றிய தவறான விளக்கங்கள் பல புதிய வடிவங்களில் உருவெடுத்து வருவதனாலும், குறிப்பாக எமது இளைஞர்கள் மத்தியில் தௌஹீத்பற்றிப் பல சந்தேகங்கள் எழுந்துள்ளமையாலும், தௌஹீத் பற்றிய தெளிவான விளக்கம் அளிக்கப்படுவது அவசியமாகின்றது.

இந்தச் சந்தர்ப்பத்தில் மக்களைத் தவறான பாதையில் செல்லாது தடுக்கவேண்டும். அல்லாஹ்வின் தண்டனையிலிருந்தும், கோபத்தில் இருந்தும் நாம் எம்மைப் பாதுகாத்துக்கொள்ளவேண்டும் எனும் நோக்கில் அல்லாஹ்வின் திருப்தி ஒன்றையே நாடி காத்தான்குடி இஸ்லாமிய வழிகாட்டல் நிலையத்தினரால் இச்சிறுநூல் வெளியிடப்படுகின்றது. மாறாக எவரையும் வம்புக்கு இழுப்பதோ, சீண்டி விடுவதோ எமது நோக்கமல்ல, அனைவரும் இந்நூலைப் பெற்றுப் படித்துப் பயனுறவேண்டும் என்பதே எமது அவா. இதனைப் படிப்பவர்கள் இந்நூலில் ஏதாவது தவறுகள் காண்பின் அவற்றைத் தயவுகூர்ந்து எமக்குச் சுட்டிக்காட்டுமாறு அன்பாய்க் கேட்டுக்கொள்கின்றோம்.

இஸ்லாமிய வழிகாட்டல் நிலையம்,
த. பெ. இல. - 01,
காத்தான்குடி.

1992-01-15.

# பொருளடக்கம்

பக்கம்

பிஸ்மில்லாஹிர்றஹ்மானிர்றஹீம்.

## தவ்ஹீத் (ஏகத்துவம்) பற்றிய அறிவின் அவசியம்

தவ்ஹீத் பற்றிய அறிவு ஒவ்வொரு முஸ்லிமுக்கும் அவசியமாகும். அதனை அடிப்படையாகக்கொண்டே இஸ்லாம் எனும் கோட்டை கட்டி எழுப்பப்பட்டுள்ளது. தவ்ஹீதில் ஏதாவது குறைபாடு இருப்பின், அக்குறைபாடு முஸ்லிம் ஒருவனின் வாழ்க்கையையே பயனற்றதாக ஆக்கிவிடும். மேலும், ஈமானின் அடிப்படைகளான அல்லாஹ்வைப்பற்றிய விசுவாசம், அவனது மலக்குகளைப்பற்றிய விசுவாசம், அவனது வேதங்களைப்பற்றிய விசுவாசம், றசூல்மார்களைப் பற்றிய விசுவாசம், இன்னும் இறுதிநாள், நன்மை, தீமைகளின் ஏற்பாடுபற்றிய தெளிவான அறிவினை வழங்குவதும், அவ்விசுவாசம் உறுதிப்பட உதவுவதும் தவ்ஹீதே ஆகும். எனவே ஒவ்வொரு முஸ்லிமும் தனது வாழ்க்கையை நல்ல முறையில் அமைத்துக்கொள்ள தவ்ஹீத் (ஏகத்துவம்) பற்றிய அறிவானது அத்தியாவசியமானதாகும்.

## ஏனைய அறிவுகளை விட தவ்ஹீத்பற்றிய அறிவு ஏன் பிரதானமானது ?

உலகில் பிறக்கும் ஒவ்வொரு மனிதனும், ஒரு வரையறுக்கப்பட்ட காலப்பகுதியில் இவ்வுலகில் வாழவேண்டியவனாக இருக்கின்றான். அவ்வாறே ஒவ்வொருவரும் தமது வாழ்க்கையைச் சீரானதாக ஆக்கிக்கொள்ள வழிகாட்டக்கூடிய ஒரு வாழ்க்கைத் திட்டமும் அவசியமானதாகும். அவ்வாழ்க்கைத் திட்டத்தினைச் சிலர் தாமாகவே வகுத்துக்கொள்ள முடியும் என எண்ணியவர்களாக, உலக வாழ்வே உண்மை வாழ்வு என்ற கண்ணோட்டத்தில் தமது மனோ இச்சைப்படி வாழ்க்கையை நடாத்துகின்றனர். இன்னும் சிலரோ, அல்லாஹ்வால் அருளப்பட்ட வேதக்கட்டளைகளைப் பின்பற்றுவதுடன், அவற்றையே தம் வாழ்வின் வழிகாட்டியாகக் கொள்கின்றனர். அல்லாஹ்வால் அருளப்பட்ட வேதக்கட்டளைகளுள் இறுதியானதும், பரிபூரணமானதும் பரிசுத்த அல்குர்ஆன் ஒன்றே ஆகும். இதன் அடிப்படையில் அமைந்த, மனித வாழ்வுக்கான சம்பூர்ணமான வாழ்க்கைத் திட்டம், எம் பெருமானார் முகம்மது (ஸல்) அவர்களது வாழ்க்கை வழிமுறை ஆகும். அல்குர்ஆனையும், றசூல் (ஸல்) அவர்களது வழிமுறைகளையும் பின்பற்றும் முஸ்லிம்களாகிய நாம், அல்லாஹ் எமது வாழ்க்கை எவ்வாறிருக்க வேண்டுமென விரும்புகின்றான் என்பதை அறிந்திருத்தல் அவசியமாகும்.

உலக வாழ்க்கையினைச் சிறப்புறச் செய்வதற்காக நாம் கற்கும் அறிவியல்கள் யாவுமே எமது இவ்வுலக வாழ்வுடன் முடிவடைந்து விடுகின்றன. ஆனால் அல்லாஹ் எம்மிடம் எதை எதிர்பார்க்கின்றான் என்பதை எமக்குக் கற்றுத்தரும் தவ்ஹீத் ஆனது உலக வாழ்வில் மாத்திரமன்றி, நிரந்தரமான, முடிவில்லாத மறுமை வாழ்விலும் பயன் தருவதாக அமைகின்றது.

உலகில் வாழும் மனிதர்கள் யாவரும் பல்வேறு நோக்கங்களை அடிப்படையாகக்கொண்டு செயற்படுகின்றனர். ஆனால் யாருடைய செயலை, அனைத்தையும் படைத்தவனான அல்லாஹ் பொருந்திக் கொள்கின்றான், ஏற்றுக்கொள்கின்றான் என்பது கேள்விக்குரியதாகும். இதற்கான விடையை எமக்கு தவ்ஹீத் பற்றிய அறிவு அளிக்கின்றது. அதாவது அல்லாஹ், தன்னை விசுவாசித்து, தனக்காக மேற்கொள்ளப்படும் செயல்களுக்கு மாத்திரமே நற்கூலி அளிப்பதுடன், மறுமையிலும் உயர் பதவிக்குரியதாகத் தெரிவுசெய்கின்றான். மாறாக, அல்லாஹ்வை விசுவாசிக்காது அல்லது சுயலாபம் கருதி அல்லாஹ்வுக்காகவே அல்லாது மேற்கொள்ளப்படக்கூடிய எந்தவொரு செயலும் சரியானதெனக் காட்டப்பட்டுச் செய்யப்பட்டபோதிலும், அல்லாஹ்வுடைய நற்கூலிக்கோ, பொருத்தத்துக்கோ உரியதாகமாட்டாது.

அல்லாஹ்வை நிராகரிப்போரின் செயல்கள் எத்தகைய நிலையை அடைகின்றன. அவர்கள் இறுதியில் எத்தகையதொரு பயங்கர முடிவினை எதிர்கொள்வர் என்பதை அல்குர்ஆன் இவ்வாறு வர்ணிக்கின்றது.

"இன்னும், எவன் விசுவாசங்கொண்டதன் பின்னர் நிராகரிக்கின்றானோ, அவனுடைய (நற்)செயல் நிச்சயமாக அழிந்துவிடும். மறுமையிலோ, அவன் (முற்றிலும்) நஷ்டமடைந்தவனாகவே இருப்பான்." அல்குர்ஆன் 5:5.

"எவர்கள் தங்களைப் போஷித்துப் பரிபாலிப்போனை நிராகரிக்கின்றார்களோ, அவர்களுடைய செயல்களின் உதாரணம், சாம்பலைப் போலிருக்கிறது. புயல் காலத்தில் அடித்த கனமான காற்று அதனை அடித்துக்கொண்டுபோய்விட்டது. தாங்கள் தேடிக்கொண்டதில் ஒன்றையும் அவர்கள் அடையமாட்டார்கள்." அல்குர்ஆன் 14:18.

எனவே, இதிலிருந்து நாம் விளங்குவது, அல்லாஹ் தன்னை விசுவாசங்கொண்டோரின் செயல்களை மாத்திரமே ஏற்றுக்கொள்கின்றான். ஏனையோரின் செயல்கள் மறுமையில் எதுவித பயனுமற்றதாக மாறிவிடுகின்றன என்பதேயாகும். மேலும், விசுவாசங்கொண்டோரது செயல்களையும், அல்லாஹ். அச்செயல்கள் தனக்காக மேற்கொள்ளப்படாதவிடத்து அவற்றையும் ஏற்றுக்கொள்வதில்லை. பின்வரும் ஹதீஸ் இதனைத் தெளிவுபடுத்துவதனைக் காணலாம்.

றசூல் (ஸல்) அவர்கள் கூறியதைத் தாம் கேள்வியுற்றதாக, அபூ ஹுறைறா (றளி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். "மறுமை நாளில் முதலாவதாகத் தீர்ப்பளிக்கப்படவென அல்லாஹ்வின் பாதையில் ஷஹீதாக்கப்பட்ட ஒருவரைக்கொண்டு வரப்படும். அவருக்கு அல்லாஹ், தான் வழங்கிய அருட்கொடைகளைப்பற்றித் தெரிவிப்பான். அதனை அவர் அறிந்துகொள்வார். அவரிடம் அல்லாஹ், நீ அவ்வருட்கொடைமூலம் என்ன செய்தாய்? என்பதாகக் கேட்பான். அதற்கவர், நான் உனக்காகப் போரிட்டு ஷஹீதானேன் எனக் கூறுவார். அதற்கு அல்லாஹ், நீ கூறியது பொய், உன்னை வீரன் என்று கூறப்படுவதற்காகவே போரிட்டாய். அவ்வாறு கூறப்பட்டுவிட்டது. பின்னர், அவனை நரகிற்குக் கொண்டுசெல்லுமாறு கட்டளையிடப்பட்டு, முகங்குப்புற இழுத்துச் செல்லப்பட்டு நரகில் தள்ளப்படுவான். அடுத்ததாக அறிவைக் கற்றதுடன், அதனை மற்றவர்களுக்கும் கற்றுக்கொடுத்து, அல்குர்ஆனையும் ஓதிய ஒரு மனிதனைக் கொண்டு வரப்படும். அவனுக்கும் அல்லாஹ், தனது அருட்கொடைகளை எடுத்துக்கூறி அதனை அவன் அறிந்துகொண்டதும், அதனைக் கொண்டு நீ என்ன செய்தாய்? என அவனிடம் வினவப்படும். அதற்கவன், நான் அறிவைக் கற்று, அதனை மற்றவர்களுக்கும் கற்பித்தேன். உனக்காக குர்ஆனை ஓதினேன் எனப் பதிலளிப்பான். அதற்கு, (அல்லாஹ்), நீ கூறியது பொய், உன்னை 'அறிஞன்' என்று கூறப்படுவதற்காகக் கல்வியைக் கற்றாய். 'காரீ' எனக் கூறப்படுவதற்காக குர்ஆனை ஓதினாய். (உலகில்) அவ்வாறே உனக்குக் கூறப்பட்டுவிட்டது. பின்னர், அவனையும் முகங்குப்புற இழுத்துச் செல்லப்படுமாறு ஏவப்பட்டு நரகில் தள்ளப்படும். அடுத்ததாக அல்லாஹ், அதிகளவில் அருட்கொடைகளை வழங்கி, பலவகையான சொத்துக்களையும் அளித்த (கொடை வள்ளலான) ஒரு மனிதனைக்கொண்டு வரப்படும். அவனிடமும் அல்லாஹ் தனது அருட்கொடைகளை நினைவுபடுத்துவான். அதனை அவன் அறிந்துகொள்வான். அவனிடம், நீ அதன்மூலம் என்ன செய்தாய்? என வினவப்படுகையில், அவன், (அல்லாஹ்வை நோக்கி) நீ எவ்வெவ்வழிகளில் செலவழிக்கப்பட வேண்டும் என விரும்புவாயோ, அவ்வழிகளில் எல்லாம், உனக்காகச் செலவழித்தேன் எனப் பதிலளிப்பான். அதற்கு அல்லாஹ், நீ கூறியது பொய், உன்னை 'கொடை வள்ளல்' எனக் கூறப்படுவதற்காகவே செலவழித்தாய். அவ்வாறு உனக்குக் கூறப்பட்டுவிட்டது. அவனையும், நரகத்திற்கு எடுத்துச் செல்லுமாறு ஏவப்பட முகங்குப்புற இழுத்துச் செல்லப்பட்டு நரகில் எறியப்படுவான்.'' ஆதாரம்-முஸ்லிம்.

இந்த ஹதீஸ்மூலம் அல்லாஹ் தனக்காகவென மேற்கொள்ளப்படும் காரியங்களுக்கு மாத்திரமே மறுமைநாளில் நற்கூலி வழங்குகின்றான் என்பதைப் புரிந்துகொள்ளலாம். எனவே நாம் புரியக்கூடிய செயல்கள் யாவும், அல்லாஹ்வுக்காக எனும் எண்ணத்துடன், மனத்தூய்மையுடன் மேற்கொள்ளப்படல் வேண்டும். எனவே ஒருவனது

செயல்கள் அல்லாஹ்வின் பொருத்தத்தினைப் பெறுவதாயின், சரியான விசுவாசத்தோடு (ஈமானோடு) மேற்கொள்ளப்படல் வேண்டும். ஒருவனது விசுவாசம் சரியானதாக அமையவேண்டுமெனில், அவனிடம் தவ்ஹீத்பற்றிய தெளிவான விளக்கம் இருத்தல் அவசியம் ஆகும். அவ்வேளையில மாத்திரமே, இஸ்லாமிய அடிப்படைகளுக்கு மாறான கொள்கைகளை அவன் தவிர்ந்துகொண்டு, நேர்வழியில் நடப்பதற்கு வழியேற்படும்.

## உலக வாழ்வும், தவ்ஹீத் (ஏகத்துவம்) பற்றிய அறிவும்

தவ்ஹீத்பற்றிய தெளிவான அறிவைப் பெறாது, அல்லாஹ்வின் கட்டளைகளை நிராகரித்து வாழ்வோரது வாழ்க்கை எத்தகையது என்பதை அல்லாஹ், பின்வரும் குர்ஆன வசனங்கள்மூலம் தெளிவு படுத்துகின்றான்.

"எவர்கள் நிராகரிக்கின்றார்களோ, அவர்கள் மிருகங்கள் உண்பதைப்போல் உண்டுகொண்டும், (மிருகங்களைப்போல்) சுகத்தை அனுபவித்துக்கொண்டும் இருக்கிறார்கள். (எனினும்) அவர்கள் (இறுதியாகத்) தங்குமிடம் நரகந்தான். அல்குர்ஆன் 47:12.

இவ்வசனத்தின்மூலம் தவ்ஹீத் பற்றிய விளக்கமின்றி நிராகரிப்போரும், மிருகங்களும் சமமாகவே கருதப்படுகின்றனர் என்பது புலனாகின்றது. ஆயினும் அல்குர்ஆனில் இன்னுமோர் இடத்தில், உண்மையை அறிந்து, குறுகிய உலக நோக்கங்களுக்காக, தமது மனோ இச்சைகளைப் பின்பற்றி வாழ்வோரை, மிருகங்களையும் விட இழிவானவர்கள் என அல்குர்ஆன் பின்வருமாறு வர்ணிக்கின்றது.

"நிச்சயமாக மனிதர்களிலும், ஜின்களிலும் அநேகரை நாம் நரகத்திற்காகவே படைத்திருக்கின்றோம். (அவர்கள் எத்தகையோரெனில்) அவர்களுக்கு இருதயங்கள் இருக்கின்றன.* எனினும் அவற்றைக் கொண்டு (இவ்வுலக அத்தாட்சிகளை) அவர்கள் பார்க்கமாட்டார்கள். அவர்களுக்கு செவிகளுமுண்டு. எனினும் அவற்றைக் கொண்டு அவர்கள் (நல்லுபதேசங்களுக்கு) செவிசாய்க்கமாட்டார்கள். இத்தகையோர் மிருகங்களைப் போன்றவர்கள் – அவ்வாறல்ல, அவற்றைவிட அதிகமாக வழிகெட்டவர்களாகவே இருக்கின்றனர். இத்தகையோர்தாம் (நம் வசனங்களை) அலட்சியம் செய்தவர்களாவர்.'' அல்குர்ஆன் 7:179.

எனவே, உண்மையான தவ்ஹீத் பற்றிய அறிவைப் பெற்று வாழ்வது ஒவ்வொரு மனிதனுக்கும் அவசியமாகும். அதனைப் பெற்றுக்கொள்ளக்கூடிய ஒரேவழி அல்லாஹ்வுடைய வேதங்கள் மூலமும், அவனது தூதர்களின் வாக்குகள் மூலமும் அந்த அறிவைப் பெறுதல்

ஆகும். இன்று எம் மத்தியில் சரியான தவ்ஹீதை எடுத்தியம்பிக் கொண்டிருப்பன அல்குர்ஆனும், அல்ஹதீஸும் ஆகும். ஆயினும், அவற்றில் இருந்தும், சரியான தவ்ஹீதினை விளங்கிக்கொள்வதில் இருந்தும், மக்களைத் தடுக்கும் சில வழிதவறிய மனிதர்கள் உலகின் கண் தோன்றி, உண்மையை விளங்குவதில் இருந்து மக்களைத் தடுப்பதற்கு முயற்சித்தவண்ணமே இருந்துவருகின்றனர். அவர்கள் தங்களது வாதங்களுக்கு ஆதாரமாக அல்குர்ஆன் வசனங்களுக்கும், ஹதீஸ்களுக்கும் தமது நோக்கங்களை அடையும் வகையில் தவறான விளக்கங்களைக் கற்பிப்பதற்குத் தயங்கமாட்டார்கள். தமது கொள்கையை நியாயப்படுத்தப் பொய்யான, இட்டுக்கட்டப்பட்ட ஹதீஸ்களாயிருப்பினும் அவற்றைச் சரியென எடுத்தாள்வர். தாம் சரியான வழியில் தான் இருக்கிறோம் என்பதைத் தமது வாதங்கள்மூலம் மக்களுக்குக் காட்டி, மக்கள் மத்தியில் செல்வாக்கைப் பெறவும், மக்களைத் தம் பால் ஈர்க்கவும் அவர்கள் முயற்சிக்கின்றனர். இவ்வகையில் உலகில் மக்களை வழிகெடுப்பதோடு அல்குர்ஆனுக்கும் தம் மனோ இச்சைக்கு ஏற்றவாறு விளக்கமளிப்போரைப் பற்றி றசூல் (ஸல்) அவர்கள் பின்வருமாறு குறிப்பிட்டார்கள். றசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு அப்பாஸ் (றழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். "எவர் அல்குர்ஆனுக்கு தமது அபிப்பிராயப்படி விளக்கமளிக்கின்றாரோ, அவர் நரகில் தனக்குரிய இடத்தை அமைத்துக்கொள்ளட்டும்."

ஆதாரம் - திர்மிதி.

அல்குர்ஆனுக்கு யாரும் தம் இஷ்டப்படி விளக்கம் அளிக்க முடியாது. அவ்வாறு விளக்கம் அளிப்பது மாபெரிய குற்றமாகும். அல்குர்ஆனை விளங்க விரும்புவோர், தங்களது மனதில் ஆழமாகப் பதிந்துள்ள தவறான கருத்துக்களை வைத்தோ, அல்லது உலக சுகபோகங்களை அடைவதற்காகக் குறுகிய நோக்கங்களை அடிப்படையாகக்கொண்டு, அளிக்கப்பட்ட விளக்கங்களை வைத்தோ, அல்குர்ஆனை விளங்க முயற்சிக்கக்கூடாது. மாறாக, அல்குர்ஆனில் உள்ள சில வசனங்களுக்கு வேறு சில வசனங்கள் வழங்கும் தெளிவான விளக்கத்தை வைத்து, அல்லது ஏற்றுக்கொள்ளப்பட்ட ஹதீஸ்கள் வழங்கும் விளக்கத்தைக் கொண்டு அல்லது அல்குர்ஆனுக்கு ஸஹாபாக்கள் வழங்கிய விளக்கங்களை வைத்து அல்குர்ஆனை விளங்க முயலுதல்வேண்டும். இந்த வழியிலேயே சங்கைக்குரிய இமாம்கள் அல்குர்ஆனை விளங்கினார்கள், அதற்கு விளக்கமும் அளித்தார்கள்.

இவ்வாறாக சுயலாபத்துக்காக மக்களைத் தவறான வழியில் இட்டுச் செல்வோரின் உண்மை நிலையினை அல்லாஹுதஆலா அல்குர்ஆனில் பல இடங்களில் தெளிவுபடுத்துகின்றான். அவற்றில் சிலவற்றை இங்கு நோக்குவோம். முற்காலத்தில் நஸாறாக்களிடையே காணப்பட்ட இத்தகையோரை அல்லாஹ் இவ்வாறு வர்ணிக்கின்றான்.

"விசுவாசிகளே! நிச்சயமாக (அவர்களுடைய) மதகுருமார்களிலும், சந்நியாசிகளிலும் அநேகர் மக்களின் பொருள்களைத் தப்பான முறையில் விழுங்கிவிடுவதுடன், (மக்கள்) அல்லாஹ்வுடைய பாதையில் செல்வதனையும் தடை செய்கின்றனர்.'' அல்குர்ஆன் 9:34.

இன்னுமோர் இடத்தில்,

"அவர்களை நோக்கி, "நீங்கள் பூமியில் விஷமம் செய்(து கொண்டு அலை)யாதீர்கள்'' என்று கூறப்பெற்றால், (அதற்கு) அவர்கள், "நாங்கள் நல்லதைச் செய்வோர்தாம்! (விஷமிகளல்ல)'' எனக் கூறுகிறார்கள். நிச்சயமாக அவர்கள் விஷமிகளேயன்றோ? ஆனால், (தாங்கள்தாம் மூடர்கள் என்பதை) அவர்கள் அறிந்துகொள்ளமாட்டார்கள்.'' அல்குர்ஆன் – 2 : 11-12.

"நியாயமின்றி, பூமியில் கர்வங்கொண்டலைபவர்கள், என்னுடைய கட்டளைகளைப் புறக்கணிக்கும்படி செய்துவிடுவேன். ஆகவே அவர்கள் அத்தாட்சிகள் யாவையும் (தங்கள் கண்ணால்) கண்டபோதிலும் அவர்கள் அதனை(த் தாங்கள்) செல்லும் வழியாக எடுத்துக்கொள்ளமாட்டார்கள். எனினும் தவறான வழியைக் கண்டாலோ, அதனையே (தாங்கள்) செல்லும் வழியாக எடுத்துக்கொள்வார்கள். நிச்சயமாக, அவர்கள், நம்முடைய வசனங்களைப் பொய்யாக்கி, அவைகளைப் புறக்கணித்துப் பாராமுகமாயிருந்ததே இதற்குரிய காரணமாகும்.'' அல்குர்ஆன் 7 : 116.

உலகில், இத்தகைய தவறான வழியில் செல்லும் தலைவர்களையும், பெரியோர்களையும் பின்பற்றி நடந்து, மறுமையில் அல்லாஹ்வின் தண்டனைக்குள்ளாவோர், தாம அடையும் வேதனையினைத் தாங்கமுடியாதவர்களாக அல்லாஹ்வை நோக்கிப் பின்வருமாறு கூறுவார்கள்.

"எங்கள் இறைவனே! நிச்சயமாக நாங்கள் எங்கள் தலைவர்களுக்கும், எங்கள பெரியோர்களுக்குமே வழிப்பட்டோம். அவர்கள் எங்களைத் தப்பான வழியில் செலுத்திவிட்டார்கள. (ஆகவே) எங்கள் இறைவனே! நீ அவர்களுக்கு இருமடங்கு வேதனையைக் கொடுத்து, அவர்கள மீது மகத்தான சாபத்தை இடுவாயாக'' எனறு கூறுவார்கள்.'' அல்குர்ஆன் 33: 67,68

மேலும், உலகில் மக்களைத் தவறான வழியில் நடாத்திக் கொண்டிருந்தோர், தாங்கள் எதற்கும் பொறுப்பாளிகள் அல்ல எனக் கூறி, மறுமையில் தம்மைக் காப்பாற்றிக்கொள்ளவே முயற்சிப்பர். இதனை அல்லாஹ் பின்வருமாறு குறிப்பிடுகின்றான்.

"பலஹீனமானவர்கள் கர்வங்கொண்டவர்களை நோக்கி, "நீங்கள் இல்லாவிடில், நிச்சயமாக நாங்கள் விசுவாசங்கொண்டேயிருப்போம்'' எனக் கூறுவர். அதற்கு (அவர்களில்) கர்வங் கொண்டிருந்த

வர்கள், பலஹீனமாக இருந்தவர்களை நோக்கி, "உங்களிடம் நேரான வழி வந்ததன் பின்னர், (நீங்கள் அதில் செல்லாது) நாங்களா உங்களை, அதை விட்டுத் தடுத்துக்கொண்டோம்? (அவ்வாறு) இல்லை, நீங்கள் தாம் (அதில் ]செல்லாது) குற்றவாளிகளானீர்கள்" என்று கூறுவார்கள்." அல்குர்ஆன் 34: 31.32

இவ்வாறாக, மக்களை வழிகெடுக்கும், உண்மைக்கு மாறான பல கருத்துக்கள் தோன்றி மறைந்துள்ளமையினை இஸ்லாமிய உலக வரலாற்றில் அதிகமாகக் காணலாம். உதாரணமாக காதியானிகள், அத்வைதிகள், முஜஸ்ஸிமாக்கள், ஜஹ்மிய்யாக்கள் போன்றோரைக் குறிப்பிடலாம். இன்றுகூட எம் மத்தியில், தவ்ஹீத் சம்பந்தமாக பல்வேறு சந்தேகங்கள் எழுப்பப்பட்டு வருகின்றன. இவ்வேளையில், ஒவ்வொரு முஸ்லிமும், அல்லாஹ்வின் கோபத்தில் இருந்தும் தன்னைத் தற்காத்துக்கொள்ள, சரியான தவ்ஹீத் யாது என்பது பற்றித் தெளிவாக அறிந்து, தனது ஈமானை உறுதிப்படுத்திக்கொள்ளவேண்டியது அவசியமாகும். இதனைக் கவனத்திற் கொண்டே இப்பிரசுரம் வெளியிடப்படுகின்றது. எனவே, இஸ்லாத்தில் தவ்ஹீத் பற்றிய சில அடிப்படைகளை இதன்கீழ் நோக்குவோம்.

## தவ்ஹீத் என்றால் என்ன?

"தவ்ஹீத்" எனும் சொல் 'வஹ்ஹத' என்ற அறபுச் சொல்லின் அடியாகப் பிறந்ததாகும். 'ஒருமைப்படுத்தல்' எனும் பொருளைக் குறிக்கும் இச்சொல் அல்லாஹ்வை ஒருமைப்படுத்துவதற்கே பயன்படுத்தப்படும். அதாவது, அல்லாஹ் ஒருவன், அவனது பண்புகளிலோ, செயல்களிலோ அவனுக்கு யாரும் இணையாக மாட்டார்கள். வணக்கமும் அவனுக்கு மாத்திரமே சொந்தமானதாகும். இக்கருத்தினையே சூறத்துல் இஹ்லாஸ் குறிப்பிடுகின்றது.

"(நபியே! மனிதர்களை நோக்கி) நீர் கூறும்: அல்லாஹ் ஒருவன் தான். (அந்த) அல்லாஹ் (எவருடைய) தேவையுமற்றவன். (யாவும் அவன் அருளையே எதிர்பார்த்திருக்கின்றன.) அவன் (எவரையும்) பெறவுமில்லை. (எவராலும்) பெறப்படவுமில்லை. (ஆகவே அவனுக்குத் தகப்பனுமில்லை) தவிர, அவனுக்கு ஒப்பாகவும் ஒன்றுமில்லை. அல் குர்ஆன்-112

## அனைத்தையும் படைத்துப் பரிபாலித்து, போஷிப்பவனான அல்லாஹ்

அல்லாஹ் அனைத்தையும் படைப்பதில், பரிபாலிப்பதில் தனித்தவன். அவ்வாறே அண்டசராசரங்கள் அனைத்திலுமுள்ள படைப்பினங்கள் யாவற்றினதும் பரிபாலகன் அல்லாஹ்வே ஆவான். படைத்

தல், பரிபாலித்தல், போஷித்தல், ஆட்சி செய்தல், உயிர்ப்பித்தல், மரணிக்கச் செய்தல், அருட்கொடைகளை வழங்கல், சிலதை சிலருக்கு வழங்காதுவிடல், கண்ணியப்படுத்தல், சிறுமைப்படுத்தல் இவை யாவும் அல்லாஹ்வுக்கு மாத்திரமே சொந்தமானவை ஆகும்.

"எல்லாப்புகழும் அல்லாஹ்வுக்குரியதே. அவனே வானங்களையும், பூமியையும் படைத்தவன். இருள்களையும், பிரகாசத்தையும் உண்டாக்கியவனும் அவனே." அல்குர்ஆன் 6:1

"(நபியே!) நீர் கூறுவீராக. "எங்கள் அல்லாஹ்வே! சகல அதிபதியே! நீ விரும்பியவர்களுக்கு ஆட்சியைக் கொடுக்கின்றாய். நீ விரும்பியவர்களிடமிருந்து ஆட்சியை நீக்கி விடுகின்றாய். நீ விரும்பியவர்களைக் கண்ணியப்படுத்துகின்றாய். நீ விரும்பியவர்களை இழிவுபடுத்துகின்றாய். நன்மைகள் யாவும் உன்கையில் தான் இருக்கின்றன. நிச்சயமாக நீயே யாவற்றின் மீதும் பேராற்றலுடையோன்." அல்குர்ஆன் 3: 26

படைப்பாளனும், பரிபாலிப்பவனுமான அல்லாஹ், தனது படைப்புகளுள் பிரமாண்டமான, அண்டவெளியில் நிகழும் சில தோற்றப்பாடுகளைக் குறிப்பிட்டு, அவற்றின் மூலம் தனது வல்லமையினையும், படைப்பின் நுட்பத்தினையும் எடுத்துக்காட்டுவதனைப் பின்வரும் ஆயத்துகளில் காணலாம்.

"இரவும், இவர்களுக்கோர் அத்தாட்சியாகும். அதிலிருந்தே நாம் பகலை வெளிப்படுத்துகின்றோம். இன்றேல், இவர்கள் இருளில் மூழ்கிவிடுவார்கள். தன்னுடைய வரையறைக்குள் (தவறாமல்) செல்லும் சூரியனும் (ஓர் அத்தாட்சியாகும்). இது (யாவையும்) நன்கறிந்தோனும், மிகைத்தோனுமான (அல்லாஹ்)வினால் விதிக்கப்பட்டதாகும். (உலர்ந்து வளைந்த) பழைய பேரீச்சங் கம்பைப் போல் (பிறையாக) ஆகும் வரையில், சந்திரனுக்கு நாம் பல நிலைகளை ஏற்படுத்தியிருக்கின்றோம். சூரியன், சந்திரனை அணுகமுடியாது. இரவு, பகலை முந்த முடியாது. (இவ்வாறே கிரகங்களும், நட்சத்திரங்களும்) ஒவ்வொன்றும் (தன்னுடைய) வட்டவரைக்குள் நீந்திச் செல்கின்றது." அல்குர்ஆன் 36: 37-40

மனிதனது நாளாந்த வாழ்வில் அல்லாஹ் புரிந்துவரும் அருட்கொடைகளில் முக்கியமான சிலவற்றை பின்வரும் அல்குர்ஆன் வசனங்களில் விளக்குகின்றான்.

"நீங்கள் (பூமியில்) பயிரிடுபவைகளைக் கவனித்தீர்களா? அதனை நீங்கள் (முளைப்பித்துப்) பயிராக்குகின்றீர்களா? அல்லது நாம் தாம் பயிராக்குகிறோமா? நாம் விரும்பினால், அதனை (விளையாத) பதர்களாக்கிவிடுவோம். அந்நேரத்தில் நீங்கள் ஆச்சரியப்பட்டு, "நிச்சயமாக நாங்கள் நஷ்டமடைந்துவிட்டோம்", "அன்றி, எங்களுக்கு ஒன்றுமே கிடைக்காது போயிற்று" (என்றும் கூறிக்கொண்டிருப்பீர்கள்).

"நீங்கள் குடிக்கின்ற நீரைக் கவனித்தீர்களா? மேகத்திலிருந்து நீங்கள் அதனைப் பொழிவிக்கின்றீர்களா? அல்லது நாம் பொழிவிக்கின்றோமா? நாம் விரும்பினால் அதனை (நீங்கள் குடிக்க முடியாத) உப்பு நீராக்கி விட்டிருப்போம். (இதற்கு) நீங்கள் நன்றி செலுத்த வேண்டாமா?"

"நீங்கள் அடுப்பில் மூட்டுகின்ற நெருப்பையும் கவனித்தீர்களா? அதன் மரத்தை நீங்கள் உற்பத்தி செய்கின்றீர்களா? அல்லது நாம் உற்பத்தி செய்கின்றோமா?" அல்குர்ஆன் 56: 63-72

எனவே உலகத்தையும், அதிலுள்ளவற்றையும் பரிபாலிக்கும் உரிமை அல்லாஹ்வுக்கு மாத்திரம் சொந்தமானதாகும். மாறாக, உலகில் வாழுகின்ற அல்லது மரணித்துவிட்ட எவராலும், யாருக்கும் உணவு வழங்கவோ, நன்மைகளை அளிக்கவோ, தீமைகளைத் தடுக்கவோ முடியாது. அவ்வாறு அல்லாஹ்வுக்கே உரிய பணிகளைச் செய்யும் ஆற்றல், அல்லாஹ் அல்லாத நபிமார்கள், வலிமார்கள், நல்லோர்கள், பெரியோர்களுக்கும் உண்டு என நம்புவது, அல்லாஹ்வுக்கு இணை வைப்பதாகவே அமையும். இவ்வாறான ஷிர்க்கினை விட்டும் அல்லாஹ் எம்மைப் பாதுகாப்பானாக.

## வணங்குதற்குரியவனான அல்லாஹ்

அல்லாஹ் மாத்திரமே வணங்குதற்கு உரியவன், மனிதனது உள்ளத்தால், உறுப்புக்களால் நிறைவேற்றப்படும் அனைத்து வழிபாடுகளையும், அல்லாஹ் ஒருவனுக்காக மேற்கொள்ளவேண்டுமே தவிர, வேறு எவருக்காகவும் நிறைவேற்றுதல் கூடாது. இதனையே "லாஇலாஹ இல்லல்லாஹு" எனும் கலிமா குறிக்கின்றது. இதன் பொருள், 'உண்மையாக வணங்கப்படுபவன், அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை' என்பதாகும். அல்லாஹ் மாத்திரமே வணக்கத்திற்குப் பாத்தியதை உடையவன். அவன் அல்லாதவை மிக நுண்ணிய அணு தொடக்கம் நட்சத்திர மண்டலங்கள் வரை யாவுமே அவனது படைப்புக்கள் ஆகும். அவற்றுள் எதுவுமே அவனுக்கு இணையாக்கப் படமுடியாது. அவ்வாறு செய்வது ஷிர்க் வைப்பதாக அமையும். இந்த கலிமா தையிபாவினையே, உலகில் தோன்றிய அனைத்து நபிமார்களும், றசூல்மார்களும் வலியுறுத்தி வந்துள்ளனர். அல்குர்ஆனும் இதனைப் பல இடங்களில் குறிப்பிடுகின்றது.

"(நபியே!) உமக்கு முன்னர் நாம் அனுப்பிய தூதர்களுக்கெல்லாம், "நிச்சயமாக என்னைத் தவிர வேறு நாயனில்லை, எனவே என்னையே நீங்கள் வணங்குங்கள்" என்று நாம் வஹி அறிவிக்காமல் இல்லை". அல்குர்ஆன் 21: 25

"நிச்சயமாக நாம், 'நூஹை' அவருடைய மக்களுக்கு (நம்முடைய) தூதராக அனுப்பி வைத்தோம். அவர், (அவர்களை

நோக்கி), ''என்னுடைய மக்களே! நீங்கள் அல்லாஹ்வை வணங்குங்கள். அவனைத்தவிர வேறு நாயன் உங்களுக்கு இல்லை. (இதற்கு நீங்கள் மாறு செய்தால்) நிச்சயமாக நான் உங்களுக்கு வரக்கூடிய மகத்தானதொரு நாளின் வேதனைக்குப் பயப்படுகின்றேன்.'' என்று கூறினார்.'' அல்குர்ஆன் 7: 59

அல்குர்ஆனின் வசனங்களில் சிலவற்றுக்கு வேறு சில வசனங்களே விளக்கம் தரும் நிலையினை மேலே உள்ள வசனங்களில் நாம் காணுகின்றோம். 'இலாஹ்' என்பதன் கருத்து 'வணங்கப்படுபவன்' என்பதனாலேயே, அச்சொல்லுக்கு முன்னாலோ, பின்னாலோ அவனையே வணங்குமாறு பணிக்கும் சொற்களை அல்லாஹ் பிரயோகித்திருப்பதனை மேலே குறிப்பிட்ட வசனங்களில் காணமுடிகின்றது.

முஷ்ரிகீன்களால் (இணைவைப்போரால்) எத்தனையோ கடவுளர்கள் வணங்கப்படுகின்றார்கள். ஆனால் அவர்கள் கடவுள்களாக இருப்பதற்குரிய தகைமைகள் எதனையும் பெற்றிருக்கவில்லை. உதாரணமாக படைத்தல், காத்தல், நன்மைபுரிதல், தீங்கிழைத்தல், உயிர்ப்பித்தல், மரணிக்கச் செய்தல் போன்ற எதனையும் செய்யும் ஆற்றல் அவர்களுக்கு இல்லை. இதனைப் பின்வரும் திருமறை வசனம் தெளிவுபடுத்துகின்றது.

''(இணைவைத்து வணங்குவோர்) அவன் அல்லாதவற்றைத் தெய்வங்களாக எடுத்துக்கொண்டிருக்கின்றார்கள். அவை எதொன்றையும் படைக்கவில்லை. (எனினும்) அவைகளும் (அல்லாஹ்வினால்) படைக்கப்பட்டவையே! அன்றி (அவை) தங்களுக்கே யாதொரு நன்மையையும், தீமையையும் செய்யச் சக்தியற்றவை. மேலும் உயிர்ப்பிக்கவோ, மரிக்கச்செய்யவோ, உயிர்கொடுத்து எழுப்பவோ அவை சக்தியற்றவையாகவும் அவை இருக்கின்றன.'' அல்குர்ஆன் 25:3

எனவே படைப்பினங்களைப் படைத்துப் பரிபாலிக்கும் அல்லாஹ்வே உண்மையாக வணங்கப்படத் தகுந்தவன். இதனாலேயே அல்லாஹ் தன்னை மாத்திரமே வணங்குமாறு பணிக்கின்றான். அல்லாஹ் ஒருவனே உண்மையாக வணங்குவதற்கு உரியவனாக இருப்பதனால், 'லாஇலாஹ இல்லல்லாஹு' எனும் கலிமாவுக்கு சரியான கருத்து, 'உண்மையாக வணங்கப்படுபவன் அல்லாஹ்வைத்தவிர வேறு யாருமில்லை' என்பதாகும்.

## அல்லாஹ்வுக்குரிய பண்புகள்

அல்குர்ஆனிலும், ஹதீஸ்களிலும் தெரிவிக்கப்பட்டுள்ள அல்லாஹு தஆலாவின் திருநாமங்களையும், அவனது பண்புகளையும் அவனுக்கு மாத்திரமே சொந்தமானதென விசுவாசங்கொள்வது முஸ்லிம்கள் மீது கடமையாகும்.

அல்லாஹ்வுடைய பண்புகள் பரிபூரணமுடையவையாகும். ஆனால், மனிதனுக்கும் அவனது வாழ்க்கைக்கு உதவியாக அல்லாஹ் சில பண்புகளை அளித்திருக்கின்றான். அதனை திருமறையில் அல்லாஹ் இவ்வாறு சுட்டிக்காட்டுகின்றான்.

''(நபியே!) நீர் கூறும்; அவன்தான் உங்களைப் படைத்து உங்களுக்குச் செவிகளையும், கண்களையும், இருதயங்களையும் கொடுத்தவன். (அவ்வாறிருந்தும் அவனுக்கு) நீங்கள் நன்றி செலுத்துவது வெகு சொற்பம் (ஆகும்). அல்குர்ஆன் 67:23

இவ்வாறு பார்வை, கேள்வி. பேச்சு, அறிவு, உயிர், கோபம், இரக்கம் ஆகிய பண்புகள் மனிதர்களுக்கு அல்லாஹ்வால் வழங்கப் பட்டிருந்தபோதும். அவை குறைபாடுடையவையும். நிரந்தரமற்றவையு மாகும். மனிதர்களது சில பண்புகளை நோக்கின் அவை எத்தகைய குறைபாடுகளை உடையன என்பதனை உணர்ந்து கொள்ளலாம். உதாரணமாக, மனிதனது பார்வையினை அவதானிப்பின், அது மனிதனது மிக உயர்ந்ததொரு புலனாக இருந்தபோதிலும், அது பல குறைபாடுகளை உடையது என்பது தெளிவாகப் புரியும். இரவின் இருட்டில் ஒளியின் துணையின்றி மனிதனால் எதனையும் காணமுடியாது. பகல் வேளையிலும்கூட, இலட்சக்கணக்கில் பரந்திருக்கும் நட்சத்திரங்களை அவனால் பார்க்கமுடியாது. காணும் பொருட்களில் கூட, அவற்றின் வெளித்தோற்றத்தினை மாத்திரம் அவனால் பார்க்க முடியுமே ஒழிய, அப்பொருள்களின் உள்ளார்ந்த நிலையை அவனால் காணமுடியாது. இன்னும் விமான நிலையத்தில் நாம் காணும் நூற்றுக் கணக்கான பிரயாணிகளை ஏற்றிச்செல்லும் 'ஜெட்' விமானம் ஒன்றினை, அது மிக உயரத்தில் பறக்கின்ற வேளையில், எமது கண் பார்வையானது, அதனைப் பருந்திலும் சிறிய ஒன்றாகவே காட்டு கின்றது. இது உண்மையல்லவென்பது எம் அனைவருக்கும் நிதர்சன மாகத் தெரியும். மேலும், உருவமற்ற காற்று, மின்சாரம் போன்ற வற்றையோ, நெருப்பினால் படைக்கப்பட்ட ஜின் வர்க்கத்தையோ, ஒளியினால் படைக்கப்பட்ட மலக்குகளையோ எம்மால் காணமுடிவ தில்லை. இத்தனை குறைபாடுகளையும் உடையது மனிதப்பார்வை. ஆனால், எம்மைப் படைத்த எல்லாம் வல்ல அல்லாஹ்வின் பார் வையோ குறைகள் அனைத்தையும் விட்டும் தூய்மையானதாகும், பரிபூரணமானதாகும். அவனது பார்வையிலிருந்து எதுவுமே மறைய முடியாது.

அடுத்ததாக மனித அறிவினை எடுத்துக்கொள்வோம். ஏனைய படைப்புக்களைவிட மனிதன் பல வழிகளில் சிறந்தவனாகக் காணப்படு கின்றான். அவற்றுள் ஒன்று மனிதனது பகுத்தறிவு ஆகும். பகுத்தறி வின் காரணமாகவே தான் செய்வது நன்மையானதா, தீயதா என் பதை மனிதன் பிரித்துணர்ந்து கொள்கின்றான். இவ்வகையான மனித அறிவை நோக்கிலும் அது பல குறைபாடுகளைக் கொண்டிருப்பத

னைக் காணலாம். மனிதனால் மறைவான விடயங்களை அறிய முடியாது.

மேலும் மனித அறிவானது வளர்ச்சியடையும் தன்மையுடையது. சூழல், கல்வி, அனுபவம் என்பவற்றால் அது விருத்தியடைகின்றது. இன்னும் ஒரு குறிப்பிட்ட காலப்பகுதியில் முற்றிலும் சரியெனக் கண்ட ஒன்றினை, மனித அறிவானது பிறபட்ட காலப்பகுதியில் தவறெனை ஒதுக்குவதனை நாம் கண்கூடாகக் காண்கின்றோம். ஆனால் அல்லாஹ் உடைய அறிவோ குறைகளை விட்டும் அப்பாற்பட்டது. அல்லாஹ் தனது அறிவு எத்தகையது என்பதை அல்குர்ஆனில் விளக்கும் விதத்தினைச் சிறிது அவதானிப்போம்.

"(மனிதர்களே!) நீங்கள் உங்கள் வார்த்தைகளை இரகசியமாகக் கூறுங்கள். அல்லது பகிரங்கமாகவே கூறுங்கள். (எவ்விதம் கூறியபோதிலும், இறைவன் அதனை நன்கு அறிந்துகொள்வான். ஏனென்றால்) நிச்சயமாக அவன் (மனிதர்களின்) இருதயங்களிலுள்ளவைகளையும் நன்கறிபவனாக இருக்கின்றான்." அல்குர்ஆன் 67:13.

"மறைவானவற்றின் திறவுகோல்கள் அவனிடந்தான் இருக்கின்றன. அவற்(றிலுள்ளவற்)றை அவனையன்றி வேறெவரும் அறியார். தரையிலும், கடலிலும் உள்ளவைகளையும் அவன் நன்கறிவான். அவன் அறியாமல் யாதொரு இலையும் உதிருவதில்லை. பூமியின் (ஆழத்தில்) அடர்ந்த இருளில் (புதைந்து) கிடக்கும் (கடுகு போன்ற சிறிய) வித்தும், பசுமையானதும், உலர்ந்ததும் (அவனுடைய) தெளிவான (பதிவுப்) புத்தகத்தில் இல்லாமலில்லை."

அல்குர்ஆன் 6:59.

இவ்வாறுதான் அவனது அனைத்துப் பண்புகளும் அமைந்துள்ளன. அவை யாவும் எதுவித குறையுமற்றவை, பரிபூரணமானவை, நிரந்தரமானவை. இப்பண்புகளில் யாரும், எதுவும் அவனுக்கு இணையாக முடியாது. இணையாக்கவும் கூடாது. அவ்வாறு செய்வது ஷிர்க் ஆகும். அல்லாஹ்வுக்கு யாரும், எதுவும் ஒப்பாக மாட்டாது என்பதனையே பின்வரும் குர்ஆன் வசனம் குறிப்பிடுகின்றது.

"அவனுக்கு ஒப்பானது ஒன்றுமில்லை. அவன் (யாவையும்) செவியுறுவோனாகவும், உற்றுநோக்கினவனாகவும் இருக்கின்றான்." அல்குர்ஆன் 42:11.

## அல்லாஹ்வை அறிவது எப்படி?

தன்னைப் படைத்த அல்லாஹ்வைப்பற்றி அறியவேண்டியது ஒவ்வொரு மனிதனதும் கடமையாகும். அல்லாஹ்வைப்பற்றி, மனித வாழ்வின் ஆரம்ப காலப்பகுதியில் இருந்தே பல்வேறு கருத்துக்கள்

தெரிவிக்கப்பட்டு வந்துள்ளன. அல்லாஹ்வைப்பற்றிய சரியான, தெளிவான அறிவைப் பெற்றுக்கொள்ளக்கூடிய ஒரேவழி - அல்குர்ஆனில் அல்லாஹ் தன்னைப்பற்றிக் கூறியவற்றின்மூலமும், அவனது இறுதித் தூதரான முகம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வைப்பற்றிக் கூறியவற்றைக்கொண்டும் அறிதல் ஆகும்.

சூறத்துல் இஹ்லாஸில் அல்லாஹ், தன்னைப்பற்றிக் கூறுகையில், தான் தனித்தவன், தேவையற்றவன், இணையற்றவன் எனக் கூறுகின்றான். நாம் அனைவரும் தொழுகைகளின் பின்னர் ஓதிவரும் 'ஆயத்துல் குர்ஸீயிலும்' அல்லாஹ் தன்னைப்பற்றிப் பின்வருமாறு தெரிவிக்கின்றான்.

"அல்லாஹ் (எவ்வித மகத்துவமுடையவனென்றால்) அவனைத் தவிர வணக்கத்துக்குரியவன் (வேறு யாரும்) இல்லை. (அவன்) நித்தியமானவன். (என்றும்) நிலையானவன். அவனை சிறு தூக்கமும், நித்திரையும் பீடிக்காது. வானங்கள், பூமியிலுள்ளவை யாவும் அவனுடையவையே! அவனுடைய அனுமதியின்றி, அவனிடத்தில் எவர் தான் பரிந்துபேச (சிபாரிசு செய்ய) முடியும்? அவர்களுக்கு எதிரில் உள்ளவற்றையும், புறம்பாக உள்ளவற்றையும் அவன் நன்கறிவான். அவனுடைய நாட்டமின்றி, அவனுக்குத் தெரிந்தவற்றிலிருந்து யாதொன்றையும் (மற்றெவரும் தங்கள் அறிவால்) அறிந்துகொள்ள முடியாது. அவனுடைய அரசாட்சி வானங்களிலும், பூமியிலும் பரவியிருக்கின்றது. அவ்விரண்டையும் பாதுகாத்து, இரட்சிப்பது அவனுக்கு சிரமமன்று. மேலும், அவன் மிகவும் உயர்ந்தவன், மகத்தானவன்." அல்குர்ஆன் 2:255.

மேலும் அல்லாஹ்வைப்பற்றியும், அவனது மகத்துவம்பற்றியும் அறிந்துகொள்ள அவனது படைப்புக்களைப்பற்றிச் சிந்திக்குமாறு அல்குர்ஆனும், பெருமானார் முகம்மது (ஸல்) அவர்களது ஹதீஸ்களும் எம்மைப் பணிக்கின்றன. அன்றாட வாழ்வில் நாம் பயன்படுத்தும் கணனியையோ (கல்குலேட்டரையோ), பாரிய வேலைகளைத் துரிதமாகப் புரியும் கம்பியூட்டரையோ காணும்போது நாம் பிரமிப்பினால் மலைத்துவிடுகின்றோம். அவற்றை உருவாக்கிய விஞ்ஞானிகளையும், அவர்களது அறிவினையும் போற்றுகிறோம், பாராட்டுகிறோம். ஆனால் கோடிக்கணக்கான நட்சத்திரங்களையும், கோடிக்கணக்கான உயிரினங்களையும் கொண்டு எத்தனையோ அற்புதங்களையும் தம்மகத்தே அடக்கியுள்ள வானங்களைப்பற்றியோ, பூமியைப்பற்றியோ, அவற்றில் உள்ள படைப்பினங்கள்பற்றியோ நாம் சிந்திப்பதில்லை. இவ்வாறான சிந்தனையே உண்மையான அறிவினைப் பெற அவசியம் என அல்குர்ஆன் வலியுறுத்துகின்றது.

"ஏழு வானங்களையும், அவைகளைப்போல் பூமியையும் அல்லாஹ்தான் சிருஷ்டித்தான். அவைகளுக்கிடையில் (தினசரி நிகழக்கூடிய சகல விடயங்களைப்பற்றிய) கட்டளைகளை இறக்கிக்கொண்டே

இருக்கின்றான். (ஆகவே, விசுவாசிகளே!) அல்லாஹ் யாவற்றின்மீதும் ஆற்றலுடையோன் என்பதையும், நிச்சயமாக அல்லாஹ் தன் அறிவால் எல்லாவற்றையும் சூழ்ந்தறிந்துகொண்டிருக்கிறான் என்பதையும் நீங்கள் (திட்டமாக) அறிந்துகொள்வீர்களாக. அல்குர்ஆன் 65:12.

(இவ்வாறே) வானங்களிலும், பூமியிலும் எத்தனையோ அத்தாட்சிகள் இருக்கின்றன. அவற்றின் முன் அவர்கள் (அனுதினமும்) செல்கின்றனர். எனினும் அவர்கள் அவற்றை (சிந்திக்காது) புறக்கணித்தே விடுகின்றனர். அவர்களில் பெரும்பாலோர் அல்லாஹ்வை விசுவாசிப்பதில்லை. (அவ்வாறு அவர்களில் எவரேனும் விசுவாசித்த போதிலும் அவனுக்கு) அவர்கள் இணைவைக்காமலும் இல்லை.'' அல்குர்ஆன் 12:105.

''இறக்கைகளை விரித்துக்கொண்டும், மடித்துக்கொண்டும் இவர்களுக்குமேல் (ஆகாயத்தில் அணிஅணியாகப் பறக்கும்) பட்சிகளை இவர்கள் கவனிக்கவில்லையா? ரஹ்மானைத் தவிர (மற்றெவரும்) அவைகளை (ஆகாயத்தில் தூக்கிப்) பிடித்துக்கொண்டிருக்கவில்லை. நிச்சயமாக அவன் யாவற்றையும் உற்று நோக்கியவனாக இருக்கின்றான்.'' அல்குர்ஆன் 67;19

இது மாத்திரமன்றி, அறிவுடைய நல்லடியார்களைப்பற்றி அல்லாஹ் கூறுகையில், அவர்களைப் பின்வருமாறு விபரிக்கின்றான்.

''வானங்கள், பூமியின் படைப்பிலும், இரவு, பகலின் மாற்றத்திலும் அறிவுடையோருக்கு நிச்சயமாகப் பல அத்தாட்சிகளிருக்கின்றன. (அறிவுடைய) இத்தகையோர் (தாங்கள்) நின்ற நிலையிலும், இருப்பிலும், படுக்கையிலும் அல்லாஹ்வையே நினைத்து, வானங்கள், பூமியின் படைப்புப்பற்றிச் சிந்தித்து, ''எங்கள் இறைவனே! நீ இவற்றை வீணுக்காகப் படைத்துவிடவில்லை. நீ மிகத் தூயவன். (நரக) நெருப்பின் வேதனையிலிருந்து எங்களை நீ இரட்சிப்பாயாக.'' (எனப் பிரார்த்தனை செய்வார்கள்). அல்குர்ஆன் 3:190,191.

இவ்வாறு அல்லாஹ், அல்குர்ஆனில் பல இடங்களில், படைப்புக்களைப்பற்றிச் சிந்தித்து, அதன்மூலம் தன்னை அறியுமாறு பணிக்கின்றான். அல்லாஹ்வின் படைப்புக்களுள் வானமும், பூமியும் ஒரு புறமிருக்க, நாம் வாழும் பூமியில் காணப்படக்கூடிய தாவரங்கள், பிராணிகள், பறவைகள், பூச்சியினங்கள், மீனினங்கள்பற்றி தற்கால விண்வெளி யுகத்திலும்கூட பூரணமாக அறிய முடியாமல் மனித அறிவு தவித்துக்கொண்டிருக்கிறது. எனவேதான் மனித அறிவுக்கு எட்டிய விடயங்களைப்பற்றிச் சிந்திப்பதன்மூலம், படைப்பாளனைப் பற்றிய அறிவினைப் பெறுமாறு அல்குர்ஆன் எம்மைத் தூண்டுகின்றது. றசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (றழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: ''அல்லாஹ்வைப்பற்றிச் சிந்திக்காமல், அல்லாஹ்வின் படைப்புக்களைப்பற்றிச் சிந்தியுங்கள்.''

ஆதாரம் – அஹ்மத்.

எனவேதான் அல்லாஹ்வின் 'தாத்'தினைப் (உள்ளமையினைப்) பற்றிச் சிந்திப்பது வழிகேடாகவும், அவனது படைப்பினங்களைப் பற்றிச் சிந்திப்பது நேரிய வழிக்கு இட்டுச் செல்வதாகவும் அமைவதனைக் காணலாம். இவ்வாறில்லாமல், அல்லாஹ்வை அறியவேண்டும் என்பதற்காக, குர்ஆன், ஹதீஸில் இல்லாத வர்ணனைகளைக் கொண்டு அவனை வர்ணிப்பதும், வேற்றுமத சித்தாந்தங்களின் அடிப்படையில் அல்குர்ஆனின் வசனங்களுக்குத் தவறான விளக்கம் அளிப்பதும், இஸ்லாத்தை விட்டும் வழிதவறிச் செல்வதற்கும், இறைவனது நிரந்தர தண்டனைக்கு உள்ளாவதற்கும் வழிகோலும் செயல்களாகும்.

## அல்லாஹ்வுக்கும், அவனது படைப்புகளுக்கும் இடையிலான தொடர்பு

''அல்லாஹ்வே சகல பொருட்களையும் படைத்தவன், அவனே சகலவற்றின் பாதுகாவலன்." அல்குர்ஆன் 39:62.

''(இவ்வுலகிலுள்ள) ஒவ்வொன்றையும் படைத்தவன் அல்லாஹ்தான், அவன் ஒருவனே! (அவனுக்கு இணை, துணையில்லை). அவனே (உலகில் உள்ள யாவையும்) அடக்கி ஆளுபவன்.'' அல்குர்ஆன் 13:16.

மேற்குறிப்பிட்ட திருமறை வசனங்களில் அல்லாஹுதஆலா, தானே அனைத்தையும் படைத்தவன் என்பதனை வலியுறுத்திக் கூறுவதனைக் காணலாம். படைத்தவனும், படைப்புக்களும் ஒன்றே எனப் பகுத்தறிவுள்ள எவரும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். படைப்பாளனாகிய அல்லாஹ்வுக்கு முற்றிலும் மாறுபட்டவைகளே அவனது படைப்புக்கள் ஆகும். மனிதனது படைப்பிற்கு முந்திய நிலைமையைப்பற்றிக் கூறுகின்ற அல்லாஹ்.

''ஒவ்வொரு மனிதனுக்கும் (அவன் வெளிவருவதற்கு) முன்னர் ஒரு காலம் செல்லவில்லையா? (அதில்) அவன் இன்ன பொருள் என்றும் கூறுவதற்கில்லாத நிலைமையிலிருந்தான்.'' அல்குர்ஆன் 76:1.

இதிலிருந்து மனிதன் இல்லாமையிலிருந்து உருவாக்கப்பட்டவன், தொடக்கமும், முடிவும் இல்லாத அல்லாஹ்விலிருந்தும், அவன் வேறுபட்டவன் என்பதும் தெளிவாகின்றது. மேலும், அல்லாஹுதஆலாவின் படைப்பினங்களுள் எம் பெருமானார் முகம்மது (ஸல்) அவர்களே மிகவும் சிறப்புக்கு உரியவர்கள் ஆவார்கள். அவர்களைப் பற்றிப் பல இடங்களில் அல்லாஹ் தனது திருமறையில் புகழ்ந்துரைக்கின்றான்.

''(நபியே!) நாம் உம்மை உலகத்தார் யாவருக்கும் ஓர் அருளாகவே அனுப்பி இருக்கிறோம்.'' அல்குர்ஆன் 21:107.

''(நபியே!) நிச்சயமாக நீர் மகத்தான நற்குணங்கள் உடையவராகவே இருக்கின்றீர்.'' அல்குர்ஆன் 68;4.

''ஆனால் அவரோ அல்லாஹ்வுடைய தூதராகவும், நபிமார்களுக்கு(க் கடைசி) முத்திரையாகவும் (இறுதி நபியாகவும்) இருக்கிறார்கள்.'' அர்குர்ஆன் 33:40.

''நிச்சயமாக அல்லாஹ்வும், அவனுடைய மலக்குகளும், நபியின்மீது ஸலவாத்துச் சொல்லுகின்றார்கள்... (ஆகவே) விசுவாசிகளே! நீங்களும் அவர்மீது ஸலவாத்துச் சொல்லி ஸலாமும் கூறிக் கொண்டிருங்கள்.'' அல்குர்ஆன் 33:56.

இவ்வாறு அல்லாஹ்வின் புகழுக்கும், பாராட்டுக்கும் உரித்தான றசூல் (ஸல்) அவர்கள்மீது ஸலவாத்துச் சொல்லுமாறு எம்மையும் அல்லாஹ்வே பணிக்கின்றான். ஆயினும், றசூல் (ஸல்) அவர்களுக்கு நாம் அளிக்கும் புகழுரையானது எவ்வாறு அமைதல் வேண்டும் எனும் வரையறையினையும் எம் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறாமல் விடவில்லை. றசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக, உமர் (றழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

''மர்யமின் மகன் (ஈஷா (அலை)) அவர்களை கிறிஸ்தவர்கள் அளவு கடந்து புகழ்ந்ததுபோன்று என்னை நீங்கள் அளவுகடந்து புகழ்ந்துவிடாதீர்கள். நான் (அல்லாஹ்வின்) ஒரு அடியானேயாவேன். எனவே, (என்னை) அல்லாஹ்வின் அடியான், அவனது தூதர் என்று கூறுவீர்களாக.'' ஆதாரம் - புகாரி, முஸ்லிம்.

இந்த ஹதீஸில் மிக முக்கியமானதொரு அம்சத்தினை றசூல் (ஸல்) அவர்கள் எடுத்துக்காட்டுகின்றார்கள். அதாவது கிறிஸ்தவர்கள், தமக்குத் தூதராக அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட ஈஸா (அலை) அவர்களை, அல்லாஹ் வானளவில் உயர்த்திக்கொண்டபின், அவர் அல்லாஹ்வின் குமாரர் என்றும், அல்லாஹ்வே அவாறு வடிவில் மக்களை வழிகாட்ட உலகிற்கு வந்நான் என்றும் நம்பிக்கை கொள்ளலாயினர். இவ்வாறாகத் தன்னைப் புகழ்வதனை, றசூல் (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள். மாறாக, தமது பணிவினையும், தமது யதார்த்த நிலையினையும், தான் ஓர் அடியான், தூதர் எனும் வார்த்தைகள்மூலம் உறுதிப்படுத்தியுமுள்ளார்கள். பின்வரும் திருமறை வசனங்களும் றசூல் (ஸல்) அவர்களது கூற்றினையே மேலும் தெளிவு படுத்துகின்றன.

''முகம்மத் (ஸல்) அவர்கள் ஒரு தூதரேயன்றி வேறல்ல. அவருககு முன்னரும் (இவ்வாறே) தூதர்கள் பலர் சென்றிருக்கின்றார்கள். இவர் இறந்துவிட்டால் அல்லது வெட்டப்பட்டுவிட்டால், நீங்கள் புறங்காட்டிச் சென்றுவிடுவீர்களோ?'' அல்குர்ஆன் 3:144.

''(நபியே!) நீர் கூறும்: ''நிச்சயமாக நானும் உங்களைப் போன்ற ஒரு மனிதன்தான். நிச்சயமாக உங்களுடைய நாயகன் ஒரே

நாயன்தான் என்று எனக்கு வஹீ மூலம் அறிவிக்கப்பட்டுள்ளது. ஆகவே, எவன் தன் இறைவனைச் சந்திக்க விரும்புகிறானோ அவன் நற்கருமங்களைச் செய்து, தன் இறைவனுக்கு ஒருவரையும் இணையாக்காது (அவனையே) வணங்கிவருவானாக!'' அல்குர்ஆன் 18:110.

மேலும் ஓரிடத்தில்,

''(அல்லாஹ்) மிகப் பரிசுத்தமானவன். அவன் (முகம்மது (ஸல்) என்னும்) தன். அடியாரை(க் கஃபாவாகிய) சிறப்புற்ற பள்ளியிலிருந்து (வெகு தூரத்தில் இருக்கும் பைத்துல் முகத்தஸிலுள்ள) மஸ்ஜிதுல் அக்ஸாவிற்கு, ஓரிரவில் அழைத்துச் சென்றான்.'' அல்குர்ஆன் 17:1.

இவ்விரு வசனங்களும் எம் பெருமானார் றசூல் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் ஒரு அடியார் என்பதையும், வெளித்தோற்றத்தில் மாத்திரமன்றி, யதார்த்தத்திலும் அவர்கள் ஒரு மனிதர்தான் என்பதையும் தெள்ளத்தெளிவாக எடுத்தியம்புகின்றன. அல்குர்ஆனின் வசனங்களுக்கு தவறான விளக்கம் கூறுவதானது எம்மை நரகிற்கு இட்டுச்செல்லும் ஒரு நடவடிக்கையேயாகும். மனிதர்களுள் உயர்வான ஒருவராக றசூல் (ஸல்) அவர்கள் இருந்தபோதிலும், அவர்கள் அல்லாஹ்வின் பண்புகளுக்கு உரியவராகமாட்டார்கள்.

எனவே, இவற்றிலிருந்து நாம் வரக்கூடிய முடிவு யாதெனில், ''அல்லாஹ் வேறு, அவனது படைப்புக்கள் வேறு'' என்பதேயாகும். இதுவே சுன்னத் வல் ஜமாஅத்தினரின் கொள்கையுமாகும். இதற்கு மாறாக, 'லாஇலாஹ இல்லல்லாஹு' எனும் கலிமாவுக்கு 'அல்லாஹ்வைத் தவிர வெறொன்றுமில்லை' எனப் பொருள் கூறுவதும், 'எல்லாம் அவனே' எனக் கூறுவதும், 'அல்லாஹ்வே அவனது படைப்புகளின் தோற்றங்களில் வெளியாகியுள்ளான்' எனக்கூறுவதும், வேற்று மதக் கொள்கைகளின் செல்வாக்குக்கு உட்பட்ட சிலரால் வெளியிடப்பட்டதும், பொய்யான, இட்டுக்கட்டப்பட்ட ஹதீதுகளை ஆதாரமாகக்கொண்டு தெரிவிக்கப்படுவதுமான, தவ்ஹீத்பற்றி, முற்றிலும் தவறாக அளிக்கப்படும் விளக்கம் ஆகும். இக்கொள்கை அதனை நம்புபவர்களை இஸ்லாத்தைவிட்டும் விலக்கிவிடக்கூடியது, மதமாற்றத்தை ஏற்படுத்தக்கூடியது என்பதில் எதுவித ஐயமும் கிடையாது. யா அல்லாஹ்! எங்களை உனது கோபத்திற்குள்ளானவர்களினதும், வழிதவறியவர்களினதும், வலையிலிருந்து காப்பாற்றி, உனது நேர்வழி நடந்த நல்லடியார்களின் பாதையில் நடாத்திவைப்பாயாக.

இறுதியாக, முஸ்லிம்கள் மத்தியில் வேற்றுமதக் கருத்துக்கள் எவ்வாறு செல்வாக்குப்பெறத் தொடங்கின என்பதை வரலாற்று ரீதியாக சுருக்கமாக நோக்குதல் பொருத்தமுடையதாகும். இஸ்லாமிய வரலாற்றினை நோக்கின், அப்பாஸியர் ஆட்சிக்காலத்தின்போது

இந்திய, கிரேக்க, ரோம, பாரசீக நாகரீகங்கள் பற்றியும், அவற்றின் அறிவியல், தத்துவங்கள்பற்றியும் முஸ்லிம்கள் அறியவும், அவற்றைக் கற்கவும் வாய்ப்பு ஏற்பட்டது. இவ்வேளையில், அல்லாஹ்வின் நல்லடியார்களான, அவனது வரம்புக்குட்பட்டு நடக்கும் அறிஞர்கள், மார்க்க வரையறைகளுக்கு உட்பட்டவற்றை ஏற்று, அவற்றில் மேலும் ஆராய்ச்சிகள் செய்து அறிவியல் துறைக்குப் பெரும் தொண்டாற்றினர். வேறு சிலரோ, இஸ்லாத்தின் வரையறைகளையும் மீறி, வேற்று மதத் தத்துவங்களைக் கற்று அவற்றின் அடிப்படையில் குர்ஆனையும், ஹதீஸையும் ஆராயவும், விளக்கமளிக்கவும் முற்பட்டனர். இவ்வாறானோர்களாலேயே, இஸ்லாத்துக்கு முரணான கருத்துக்கள் இஸ்லாமிய வடிவில் பரப்பப்பட்டன. அவை சிலகாலம், சிலர் மத்தியில் காணப்பட்டபோதிலும், இறுதியில் அவற்றின் தவறுகள் உணரப்பட்டு, அக்காலத்திலேயே முற்றாக ஒதுக்கப்பட்டுவிட்டன. அக்கருத்துக்களைப் பரப்பியோரும் முஸ்லிம் சமூகத்தினால் இனங்காணப்பட்டு விலக்கப்பட்டனர். இவ்வகையான சில கருத்துக்கள் இன்று எம்மிடையே மீள உயிர்பெற்று புதிய வடிவங்களில் தலைகாட்டியுள்ளன. இவை எமது ஈமானைப் பாழாக்கி, இம்மையிலும், மறுமையிலும் எம்மை நற்பேறற்றவர்களாகவும், இறைவனின் தண்டனைக்குள்ளானவர்களாகவும் ஆக்கிவிடாது நாம் மிக அவதானமாக இருத்தல் வேண்டும். ஷரீஅத்தால் புறக்கணிக்கப்பட்ட, ஷரீஅத்திற்கு மாறான கொள்கைகளை ஏற்ற நிலையில், நாம் எவ்வளவு பிரயாசையுடன் தொழுகை, நோன்பு, ஸகாத், ஹஜ் போன்ற நல் அமல்களைச் செய்தபோதிலும் அவை எதுவித பயனும் அளிக்கமாட்டாது. இந்நிலைக்குள்ளாகாது அல்லாஹ், முஸ்லிம்கள் அனைவரையும் பாதுகாப்பானாக.



## அவதூறு கூறுவோரை அல்லாஹ் எச்சரிக்கிறான்.

★ என் இறைவன் ஹறாம் எனத் தடுத்திருப்பவையெல் லாம் வெளிப்படையான அல்லது அந்தரங்கமான மானக்கேடான செயல்கள்; பாவங்கள்; நியாயமின்றி (ஒருவருக்கொருவர்) கொடுமை செய்வது; ஆதார மில்லாமலிருக்கும்போதே; நீங்கள் அல்லாஹ்வுக்கு இணை கற்பித்தல், நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ் வின்மீது (பொய்யாகக்) கூறுவது (ஆகிய இவையே என்று நபியே!) நீர் கூறுவீராக.

— அல்–அஃராப் 7-33.

★ அன்றியும் அல்லாஹ்வின்மீது பொய்யுரைத்தார்களே (அவர்களுடைய) முகங்கள் மறுமை நாளில் கறுத்துப் போயிருப்பதை நீர் காண்பீர்; பெருமையடித்துக் கொண்டிருந்த இவர்களின் தங்குமிடம் நரகத்திலிருக் கிறதல்லவா? — அல் ஜுமர் 39–60.



**தவ்ஹீத் பற்றிய தவறான விளக்கங்களைப் பாமர மக்கள் மனங்களில் பதியச்செய்யவென எடுத்தாளப்படும் பொய்யான இட்டுக்கட்டப்பட்ட ஹதீஸ்களில் சில :**

★ இறைவன் கூறுவதாகக் கூறப்படுவதாவது :- நான் மறைவானதொரு புதையலாக இருந்தேன்; நான் (மற்றோரால்) அறியப்படவேண்டுமென விரும்பி அதற் காகப் படைப்பினங்களைப் படைத்தேன்; அவர்கள் என்னைக்கொண்டே என் (தாற்பரியத்தி)னை அறிந் தனர்.

★ தன்னை அறிந்தவன், தனது இறைவனை அறிந்து விட்டான். (அறிந்தவனாவான்)

**(இவ்விரு ஹதீதுகளும் இமாம்களான அஸ்ஸுயூதி அஸ்ஸஹாவி, அன்னவவீ, இப்னு ஹஜர் போன்றவர்களால் நிராகரிக்கப்பட்டவை களாகும் என்பது குறிப்பிடத்தக்கது.)**

